நூல் வெளியிட்டனர். அடுத்த வாரமே முதலியார் தமது மாணவகர் நெல்லைச் சுப்பிரமணிய சுவாமிகளைக்கொண்டு வேத வேதாந்த புண்டர விசாரதீப சண்டமாருதம் என வெளிப்படுத்திப் பூர்வபட்சியை மவுனமுறச் செய்தனர். 1910-ல் முதலியார் ஆண்டார் குப்பத்து ஸ்ரீபால சுப்பிரமணிய சுவாமி தரிசனார்த்தமாகச் சென்றபோது, அந்நாள் மாலை ஐந்து மணிக்கு அவ்வூர் பாலநதியில் முழங்கால் ஜலத்தில் தமது பொன் மூக்குக் கண்ணுடி விழுந்துவிட, வெகுநேரந் தேடியும் பலரைக்கொண் டாராய்ந்தும் காணுது திரும்பி,

வாக்குக்கு வல்லசெந் தமிழ்வாணர் நாளுளு மகிழ வன்றோர்
நோக்குக்கு முன்றேன் றி நற்கருணை பாலிக்கு நதிவேற் சேயே
பாக்குக்கென் றுயர்சோலை யடர்பால நதியின்று பரித்த வென்றன்
மூக்குக்கண் ணுடியையெங் ஙனம்பெறுவே னெருசூழ்ச்சி முன்னு வாயால்.

எனச் சந்நிதியி லேபாடி, மறுநாள் தானு மவ்வாலய பிரமஸ்ரீ விசுவநாத குருக்களும் சென்னையை நோக்கி வருகையில், முன்னுள் கண்ணுடி விழுந்த இடத்தினைக் குருக்களுக்குத் தெரிவிக்க, அவர் சந்தேகத்துடன் சென்று, அந்நதியி லிறங்கினவுட னவர் காலிற் கண்ணுடி சிக்குண வெடுத்துவந்து தந்தனர். திருவொற்றியூரினுக்கு வடக்கே யுள்ள சிந்தாமணித் தலபுராண வசன மியற்றினர். சென்னையிலுள்ள பொதுச் சைவர்கட்கு உபயோகமாம்படி இலௌகீக போஜனவிதி யொன் றெழுதினர். 1911-ல் திருவெவ்வளூரையடுத்த இராமபுரி தோத்திரமாலை இயற்றினர். இவ்வருடம் தமது அருமைத்தாயார் உண்ணுமுலையம்மாள் பரிபூரணமாயினமையின், கருங்கல் மனமுங் கசிந்துருகக் கையறுநிலை பாடினர். தமிழிலுந் தெலுங்கிலுமுள்ள சரிதங்களை யொருங்கு சேர்த்துக் காளத்திபுராணவசன மியற்றினர். திருவொற்றியூர்த்தலபுராண வசனம் இயற்றி வெளிப்படுத்தினர். பொன்னேரிக்கு வடகிழக்கிலுள்ள அரிய துறை புராணவசனம் எழுதினர். இவ்வருடம் காஞ்சிபுரம் மெய்கண்ட சிவாசாரிய சந்தானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மகாசந்நிதான தரிசனமடைந்து அவராசி பெற்று வருகின்றனர்.

1912-ல்-பட்டினத்துச் சுவாமிகள் பாடற்றிரட்டினுக்கும், அவர் புலம்பலுக்கும், பத்திரகிரியார் புலம்பலுக்கும் ஞானர்த்ததீபவுரை எழுதி வெளியிட்டனர். சைவசித்தாந்த மகாசமாஜத்தின்

மாதாந்தரப் பிரசுரமாகிய "சித்தாந்தம்" என்பதற்குக் கைம்மாறு கருதாக்கருணையுடன் பத்திராதிபரா யாயினர். இப்பத்திரிகையில் தமிழ்நாட்டு வைதிக சைவ பாரங்கதர்கள் பலர் அரிய நுண்ணிய பெரிய விஷயங்களை யெழுதி வருகின்றனர். முதலியார் இதுகாறு மிப்பத்திரிகையி லெழுதிய வற்றுள், சில உபநிடத மொழிபெயர்ப்பு, மகாவாக்கியார்த்தம், துரிய மூர்த்தி நிர்ணயம், அத்துவிதப் பொருள் முதலிய கவனிக்கத்தக்கன. தமது வடமொழிப் பெயரை "மணவழகு" எனத்தமிழ் மொழியாக வழங்கிவருவாராயினர். 1913-ல் சென்னைத் தேவஸ்தான கமிட்டியாரால் ஸ்ரீ அருணசலேச்சுராலயத்திற்கு டிரஸ்டிகளி லொருவராக நியமிக்கப் பெற்றனர். முதலியார் தாய் தந்தையரின் பெயர்கள் அம்பாளுக்கும் சுவாமிக்கு மமைந்திருக்கும் இவ்வாலயத் திருத்தொண்டு இவருக்குக் கிடைத்திருப்பது வியப்பே. முதலியார் தென்தேயங்களி லடிக்கடி சென்று பற்பல சைவசபைகளில் அக்கிராசனம் வகித்து, வைதிக சைவசமய உண்மையினை விளக்கி வருகின்றனர். சித்தாந்த பரிமளம், சித்தாந்தவகராதி எழுதி வருகின்றனர். அச்சில் சீக்கிரம் வெளிவரும். முதலியாருக்கு 1914 - ல் ஆநந்த வருடம் சித்திரை மாதம் 26வ சுக்கிரவாரம் சித்திரை நட்சத்திரத்தன்று சஷ்டி பூர்த்திமங்களமகோற்சவம் அறுமுகச்சிவனார் திருவருட் பிரேரகத்தால் சுபமாக நிறைவேறியது.

முதலியாருக்குத் தற்காலம் பரிவுடன் நெருங்கிய சுற்றத்தினர், முற்குறித்த தங்கைமார் நால்வர். தமையனார் புத்திரர்கள் சிவபாதமுதலியார், சிவானந்தமுதலியார் இருவர். இரண்டாவது தங்கை புத்திரர்கள் சம்பந்த மூர்த்தி முதலியார், திருநாவுக்கரசு முதலியார் இருவர். சுபுத்திரி சிவநேச அம்மாளும் அவர் கணவனார் - தே - சாமிநாத முதலியாரும். பௌத்திரர் நடராஜன், திருச்சிற்றம்பலம்.

முதலியாரிடத்து இதுகாறும் படித்த மாணவர்கள் எண்ணிலர்கள். நற்புலமை வாய்ந்தார் 36. இவருட் சிலர் துஞ்சினர். பதிகங்கள் நீங்கலாக வியற்றிய நூல்கள் 40. பரிசோதித்து அச்சிட்ட நூல்கல் 96. அவ்வவ்வமயங்களிற் பாடிய சாத்துகவி முதலியன 864.

இக்காலத்துத் தமிழ்ப் புலவருள் பெரும்பாலோர் தம்வயிறு ஓம்புத லொன்றுமே செய்து, கல்வியறிவுப் பெரும் பயன் கொள்

ளாது வாளா காலங்கழித் திடுவர். அவர் போலாது, இவர் பொருட்
செல்வத்தை யொரு பொருட்டாக மதியாது, அருட்செல்வ மொ
ன்றினையே நாடிக் கல்வி யென்னும் நற்பொருட் புலமையால் தங்
குலத்தினையும், தந்தேச நன்மை யினையும் பேணி, நன் மாணாக்கர்
கட்குக் கல்வி கற்பித்தல், நல்ல நூலுரைகளை யியற்றல் முதலிய
செய்து கல்வி யறிவின் பெரும் பயன் செம்பொருள் ஞானச்
செல்வராய் வாழ்தலேயாமென வெண்ணி, யாதொரு ஊதியமு
மெதிர் பாராது, எட்டுணையும் தேகசிரமமும் பாராட்டாது, மன
முறிவின்றிச் சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவ சமயத்தி
னைப் பரிபாலனஞ் செய்வதிலும், தெய்வமணநனி கொழிக்குஞ்
செழுந்தமிழ்த் திப்பிய பிண்டங்களாகிய வொப்பரு நூல்களை
யாராய்வதிலும், மாணவர்கட்குப் போதிப்பதிலும் உலகோபகா
ரமாக வுழைத்து வரும் எம்மாசிரியர் சித்தாந்தசரபம் அஷ்டாவ
தானம் பூவை கலியாணசுந்தர முதலியாரவர்கள் தமது அருமை
மனைவியாருடன் தீர்க்காயுளும் திடகாத்திரமும் பெற்று, நீடூழி
வாழ, அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய
ஸ்ரீ நடராஜப்பெருமான் குஞ்சித பாதத்தை அனவரதமும் மன
மொழிமெய்களால் சிந்தித்து வந்தித்து வணங்குகின்றோம். சுபம்.

வாழ்ககண் டிகைவி பூதி வாழ்கவைந் தெழுத்தாம் வார்த்தை
வாழ்கவச் சாத னத்தர் வாழ்கவை திகநற் சைவம்
வாழ்கசெந் தமிழ்நூ லியாவும் வாழ்கபா வலர்க ளியாரும்
வாழ்கவெங் குருநா தன்றன் வாழ்க்கைகா தலியு மாதோ.

சென்னபட்டணம்.
8—5—1914.

☞ மணவழகின்மாணவகர்கள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

# குருதோத்திரம்



செந்தமிழிரத்தினாகரம்

வல்லை - சண்முகசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றிய

## நவமணிமாலை



### வெண்பா

கண்மூன் றுடையான் கலியாண சுந்தரப்பேர்
மண்மீது தாங்கி வடிவெடுத்துத்—தண்ணளியா
லென்றனக்குக் கல்வி யியையும் படியருளிப்
பந்தமறுத் தாண்டான் பரிந்து.

### கட்டளைக்கலித்துறை

பரிந்தென்னை யாளப் பரசிவ மாகும் பரம்பொருளே
தெரிந்திங்குத் தோன்றிநல் லத்து விதவுண்மை தேக்கவருட்
சொரிந்தெனக் கென்றுஞ் சுகத்தை யளிக்கச் சுருங்கறிவை
விரிந்திடச் செய்தவென் றேசிகன் பாதம் விழுமியதே.

### அறுசீர்விருத்தம்

விழுமியநல் லறுசுவையா முணவதனை வாயூட்டி விபுத ரெங்குங்
குழுமியபே ரவையேறுந் திறமையையுஞ் சிற்பரன்றன் குரைகழற்கால்
தொழுமடியர் பத்தியையும் விரித்தெனக்குச் செவியூட்டிச் சோர்விலாமல்
தழுவியதென் னாரியனாங் கலியாண சுந்தரன்றன் றன்மை யாமால்.

### கலிவிருத்தம்

தன்மை யாளுந் தனிப்பெருங் கீர்த்தியைக்
கன்ம னத்த னுக்குமே காட்டினான்
சொன்ம யத்தன் கலியாண சுந்தரன்
என்ம னத்து ளிருப்பனெந் நாளுமே.

### கோச்சகம்

இரும்பெண்ணெ யக்கினியோ டெழுஞாயி றேபோல
வருமன்பு முணைமான வள்ளலினை யுள்ளாத
துரும்பன்ன புறச்சமயத் துகளறச்செஞ் சித்தார்த்தப்
பெருஞ்சரபங் கலியாண சுந்தரனெம் பெற்றியனே.

### கலிப்பா

பெற்ற மூரும் பிரானடி நாடொறும் பேணி நிற்கும் பெருந்தகை யாளனும்
உற்ற மேன்மை யுரைத்திட வொண்ணுமோ வும்பரேத்துமுயர்நெறிவாய்புரை
யற்ற மேலெட் டவதானி யானவ னருமை யாம்பூவை யார்ந்த நகருளான்
சுற்ற ருந்தவர் சூழுங் கலியாண சுந்த ரன்னடி சூடிடு மென்முடி.

### சந்தக்கலிவிருத்தம்

எந்நா யகனே யிமையோர் தலைவா
பொன்னா யகனும் பூநா யகனும்
இன்ன மறியா விறைவா வெங்கள்
மன்னா ரியன்பால் மகிழ்வாய் நிதமே.

### கழிநெடில்விருத்தம்

எட்டாங்கு நெய்யதுபோ லிலங்கியசுத் தாத்துவித வின்ப மீந்தோ
னாட்டாங்கு மிருளொழித்துப் புன்சமயர் மயக்கிலெனை யுலையா தாண்ட
அட்டாவ தானியெனுங் கலியாண சுந்தரனெம் மாரியன்றன்
மட்டாரு முளரியடி யகத்தடத்தில் மலர்த்திமிக வணங்கி வாழ்வாம்.

### பன்னிருசீர்விருத்தம்

வாழ்மதி கலையென்ன வெண்ணீ றணிந்தநுதல் வைதிகத் திருவழகுடன்
வள்ளறிரு கண்மணி வயங்குகண் டத்தழகும் வைவேல் பிடித்தகையான்
பேழ்வயிற்றானையைக்கண்டுமேபயந்தொருபெருமைபெறுவள்ளியம்மை[கும்
பெற்றிபெறுதெய்வமகளிருவருடன்மஞ்ஞையும்பெருகியொளிர் மார்பினழ
தாழ்வின்றியெவரையு நோக்குநற் றன்மையுந் தமிழ்மறைபிடித்தொளிசெயச்
சன்மார்க்க நெறிகாட்டு சின்முத்திரைகொண்டதாமரைக் கையினழகும்
காழ்த்தகற் பகமென்ன வென்முடியி லேயிலகுங் காற்கமல மலரினழகும்
கண்டுதொழு பேரருளடைந்திட்ட பாக்கியங் கனமாக வென்கண்ணதே,



## மதுரைத்தமிழ்ச்சங்கத்துவித்துவான்

வண்ணக்களஞ்சியம்

## காஞ்சி - நாகலிங்கமுதலியாரவர்கள்

இயற்றிய

### அஷ்டகம்

நுதலதனிற் பூதிசந் தனப்பொட்டுங் கண்டத்தி னுண்மை வாய்ந்த
முதல்வன்விழித் தாழ்வடமு மடியதனிற் சம்புடமு முன்க ரத்தில்
விதம்விதமா கியதடியு மிடையதனில் வெண்கலையும் விளங்கி மேவ
நிதமுலவு நற்சைவ சிகாமணியா மணவழகே நின்றாள் போற்றி.

சாந்தமுக மினியமொழி புன்சிரிப்பு மனக்கிளர்ச்சி தகவாத் தோன்றப்
போந்தமா னவர்பலர்க்கும் பன்னூல்க ளினையுரைக்கும் புகழை நாளும்
ஏய்ந்தநின் கருணையினைச் சென்னைமா நகரெங்கு மியம்பும் ஞான
வேந்தனென வேயொளிரு மணவழகே நின்சீர்த்தி விளம்பற் பாற்றே.

ஆயிரநா விருந்துமோர் கவியேனும் பாடாத வாதி சேடன்
வாயிலுன் கவிகளினை யாயிரமா யிரங்கேட்டு மனம்பு ழுங்கிக்
காயமுக்கா றேயடைந்து மண்ணினின்கீ ழேமறைந்து காதம் றானல்
தூயமண வழகேநின் புலமையினை யென்னவெனத் துதிப்பே னானே.

வாரிலகு மிலக்குமியே நின்னையொரு பொருட்டாக மதித்தி டாது
தாரிலகு வாணியினை நேசித்து மிகுபுலமை தமிழில் வாய்ந்த
சீரிலகு சித்தாந்த சரபமெனுங் கோமாற்குச் செல்வ மீய
ஏரிலகு மவன்பக்க லீவலிய வணைந்திருந்த லென்னே யென்னே.

ஏதிலர்க ளாயெண்ணிக் கற்றாரை விரோதிக்கு மெழிற்பொன் மாதே
பூதிக்குப் பயந்தாயோ கண்மணிக்குப் பயந்தாயோ புனித மாக
நீதிவழி செபிக்கின்ற வைம்மொழிக்குப் பயந்தாயோ நிமல ஞான
ஆதிபர னடிபணியு மணவழகின் மேனியினீ யமர்ந்த தென்னே.

பித்தாந்த முக்கூற்றுப் புறச்சமயர் பிணக்கனைத்தும் பெரிது மேக
முத்தாந்த மின்னதெனச் சுத்தாத்து விதவுண்மை முன்னர்க் காட்டும்
சித்தாந்த சரபமெனுங் கலியாண சுந்தரவென் சிறுமை நீக்கி
வைத்தாண்ட நினதுமுழு வன்பதனை யேயெண்ணி வாழ்த்து வேனால்.

செந்தமிழி லக்கியவி லக்கணநூற் பற்பலவுஞ் செவ்வே யெற்கு
விந்தையுறப் போதித்தெங் கென்னையுமோர் கவிஞனென விளக்கி வைத்த
எந்தைநிக ரவதானி கலியாண சுந்தரனல் லெழிற்கோ மானைச்
சிந்தையினி லெந்நாளு மறவாம லேவைத்துத் தியானிப் பேனால்.

மறைசிவா கமமுணர்ந்து மெய்த்தவத்தி லேவாழ்ந்து மதிக்குஞ் சைவ
முறைமையினி லேயொழுகுங் கலியாண சுந்தரவென் முனிவ ரர்க்கு
நிறையறுபான் மணத்துயகோற் சவமாதுதான் மங்களமாய் நிறைவே றிற்றல்
இறைவனரு ளாலின்னம் பல்லாண்டுங் கவர்வாழ்க விருநி லத்தே.



செம்பியம் கிராம முனுஷீப்

பண்டிதரத்தினம்

புழலை - திருநாவுக்கரசு முதலியாரவர்கள்

இயற்றிய

ஒருபா வொருபஃது

தெள்ளமுத மேயென்னச் செந்தமிழ்நி லேயாடச் செறிமா ணுக்கர்
உள்ளகருத் துணர்ந்தவர்பா லுயர்புலமை யினைநிறுத்து மோங்கு கல்வி
வள்ளலெனை வதிபூவை யட்டாவ தானியெனை வயங்கா நின்ற
எள்ளலிலாக் கலியாண சுந்தரனின் றுளதனை யேத்து வேனும்.

வாராத பேரில்லை வைதிகநற் சைவர்களுன் வண்மை கண்டு
சேராத பேரில்லை நின்துநட் பினைவிரும்பி நிலைக்க நாளும்
ஓராத பேரில்லை யுன்னுடைய புகழுதனை யுன்னிப் பாரில்
தீராத சீர்படைத்த கலியாண சுந்தரநின் றிறமை நன்றே.

என்னுரைக்கே னென்னுரைக்கே னுன்னுடைய கீர்த்தியினை யிருநிலத்தே
பன்னுபல வேதாக மத்துண்மை நனிதேறிப் பலர்வி யக்க
மன்னியவை திகசைவ சித்தாந்த முலகமெலா மதிக்கச் செய்யும்
என்னிருகண் மணியான கலியாண சுந்தரனே யென்சம் பத்தே.

கறைதருகண் டத்தவனே யுயர்தெய்வ மெனநாட்டிக் கருணை யோங்கும்
நிறைதருவை திகசைவ சித்தாந்த சாரமெனை நிலைத்து நாளும்
குறைவறபற் பலசாத்தி ரங்களினை யேயியற்றிக் குவல யத்தில்
உறைதருமென் கலியாண சுந்தரநின் கீர்த்தியினை யுரைப்பார் யாரே.

பாதிமதி யணிந்தபிரா னடியதனைச் சார்தற்குப் பண்பின் வாய்ந்த
பூதிமணி யைந்தெழுத்தே சத்தியசா தனமென்று பொருந்த யார்க்கும்
நீதிவழி போதித்து வைதிகநற் சைவத்தை நிரனை யஞ்செய்
கோதில்புகழ் வாய்ந்தகலி யாணசுந் தரவென்றன் குருசீ மானே.

தொண்டர்பணி செய்வதுவே நனிசிறந்த சிவபணியாந் தூய்மை யான
பண்டைமறை யனைத்தினிலும் பேசுவது மிஃதேயாம் பாரீ ரென்று
கண்டனைய செந்தமிழிற் பிரசங்க மேசெய்யுங் கருணை வாய்ந்திங்
கொண்டிறல்சேர் கலியாண சுந்தரநின் னுயர்புலமை யுரைப்பார் யாரே.

# குருதோத்திரம்.

முத்திக்கு வித்தாக விருந்திடுவ தேதென்னில் முதிர்ச்சி வாய்ந்த
பத்தியொன் றேயென்றிங் கெவ்வெவர்க்குந் திறமுடனே பரிந் துரைக்கும்
எத்திசையும் புகழ்படைத்த விற்பனர்கள் கொண்டாட விருஞ்சீ ரேற்றுத்
தித்திக்கக் கவிபாடுங் கலிபாண சுந்தரவென் செல்வப் பேறே.

நண்ணியமா ணவர்கட்குச் செந்தமிழ்நூ லனைத்தினையு நனிபோ தித்துத்
தண்ணியவை திகசைவ நெறியதனி லேயொழுகச் சதுரிற் செய்து
புண்ணியமே பொருளாக வேயடைந்து வேறுபொருள் புறக்க ணித்த
கண்ணியனே கலியாண சுந்தரநின் னருமையினைக் கணிப்பார் யாரே.

பாடமது சொல்லென்றும் பணமேது கொடுத்திடுவாய் பரிவா யென்றே
நாடதனி லேதிரிந்து பொருள்தேடி வயிற்றுக்கே நலஞ்செய் கல்வி
யாடவர்க ளனிவெட்கக் கலைப்பொருளை மாணவர்க்கிங் குபார மாக
ஈடறவே சொரிகின்ற கலியாண சுந்தரநின் னிறைமை நன்றே.

மன்னியவோர் மார்ச்சால நியாயமென மாணவரை மகிழ்ந்த ணைத்துப்
பன்னரிய செந்தமிழ்நற் கல்வியினி லுயர்புலமை பரிவி னிந்து
முன்னவன்ற னத்துவித போதத்தாற் றற்போத முனைவைப் போக்கும்
தன்னிகரிற் கலியாண சுந்தரவென் குருமணியாஞ் சாமி நீயே.



சென்னைப் புரசை இந்துமத பாலிகா

தருமபாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்

பிரசங்காமிருதம்

பாலூர் - வேலுதேசிகரவர்கள்

இயற்றிய

சாதனசதுட்கம்

## சரியை

பதிபசு பாச விலக்கண மூன்றும் பதந்தொழு மீட்டனுக் கருளிச்
சதிசெயும் பாச மகற்று முறையுஞ் சாற்றுயிர் பதியடை வகையும்
விதமுறக் காட்ட வித்தியா குருவாய் மேதினி தனிலுருக் கொண்டு
சுதைநிகர் சரியை யருள்கலி யாண சுந்தர சிவனடி போற்றி.

## கிரியை

வாழிய வடியேன் பவந்தொறு மீட்டு மாத்தவப் பகுதியா னருளான்
ஊழிதோ றோங்கு முயர்விச யார்த்தத் தொருமுதல் தன்னுருக் கரந்தே
யாழிசூ ழுலகி லென்றனைப் போல்வந் தரியவா கமத்தினுட் கிரியை
சூழுறப் போதித் தருள்கலி யாண சுந்தர குருவடி போற்றி.

யோகம்

சிந்தனைக் கரிய சிவபெருமானே திருவருள் சுரந்துகலியாண
சுந்தர னென்னத் திருவுருத் தாங்கிச் சூழ்வளி யலைசரு கதுபோல்
சந்தத மாயை தனிலலை யடியேன் றன்னைருள் யோகினை யடைய
வந்துதன் சொரூப நிலைதனைக் காட்டும் வரதனுங் குருபதம் போற்றி.

ஞானம்

சிலைவடப் பாங்கர் முனிவருக் கன்று சிவாகமப் பொருளுப தேசித்
திலகுறுந் தனைக்காட் டையனே கல்லி யாணசுந் தரனெனு நாமத்
தலைகடற் புடவி யவதரித் தரிய வருளுறுந் தனைப்பெறு ஞான
நிலையுறப் போதித் தடியனுக் கருளு நின்மல குருபதம் போற்றி.

சென்னை ஐக்கிய நாணய சங்கம் ரிஜிஸ்தராபீஸ்

அக்கவுண்டன்ட்

## வா. தி கோவிந்தராஜமுதலியாரவர்கள்

இயற்றிய

## இரத்தினபஞ்சகம்

1. சீர்பெருகு கலைபலவுந் தெரிவித்துச் சிறந்தசிவன் பதியெனவே தேற்றி மிக்க
பார்பெருகுசிவதருமம்பண்ணுவித்துப்பலசமயநிலைகடமைப்பாங்கிற்காட்டி
நீர்பெருகுநற்குணஞ்சணிகழச்செய்துநின்மலனையெந்நாளுநினையச்செய்தே
யேர்பெருகு சனனபல னெல்லாநல்கு மெழிற்குரவ னிணையடிக ளிறைஞ்சி [வாழ்வாம்.

வேறு

2. திருவோங்க வுருவோங்குந் திகழ்சென்னை மாநகரிற் சிறப்பத் தோன்றி
மருவோங்க மலரோங்கும் வான்றருவா ழிமையவரு மகிழச் சைவத்
துருவோங்க வொளியோங்கு முயர்ந்தபிர சங்கமுத லாய வற்றாற்
றிருவோங்க வுலகோங்கும் படிசெய்த சீர்த்திமிகு சிரேட்ட னன.

3. கலியாண சுந்தரனுங் கருணைவள்ளல் காதலுடன் சட்டி பூர்த்தி
நலியாத வண்ணமதா நாமகிழ நானிலத்தி னன்கு செய்தே
யொலியாரு மகோததிசூ ழுலகதனி லூழிவரை வாழ்ந்து பின்னும்
வலியாருஞ் சைவமத மேன்மைதெரிந் தெஞ்ஞான்றும் வாழ்க மாதோ.

4. இன்னவன்போ னன்னயமா ரெண்ணமுடன் யாவர்க்கும் வித்தை யீயுங்
கன்னனெவன் கருதலர்க்கு நன்மைசெயுங் காதலவன் கசிந்து சிந்தை [காத்
பொன்னவன்போற்போதித்துப்புகழ்ச்சைவம்பரப்புதலே பொழுது போக்
தன்னகத்திற் கொண்டுள்ள தகவுமிக்கான் வாழியென்றுந் தரணி மீதே.

5. தேம்வாழுங் கடுக்கைமுடிச் சிவபெருமான் சீர்பரவித் திருவை யார்ந்து
நாம்வாழ நமர்வாழ நானிலத்தோர் நனிவாழ நல்ல நீறு
தாம்வாழ வுருத்திராக்கந் தன்னிகரில் பஞ்சவன்னந் தழைத்து வாழ
வோம்வாழ வொலிசீர்த்தி கலியாண சுந்தரனு முரவோன் வாழ்க.

# குருதோத்திரம்.

தமிழ்ப்பண்டிதர்

## வல்லி. ப. தெய்வநாயகமுதலியாரவர்கள்

இயற்றியது

குணகடல் குமரி குடகுவேங் கடமுங் கோதிநீ வரம்பர மளவு
மணவழ குயரவ தானியென் றுரைக்கு மாநிலாப் புகழினை வாய்ந்து
கணமதி லிலக்கக் கவிகளைப் பாடக் காதலாப் படிப்பவர்க் கூட்டிப்
பணமுடிப் பரமன் பத்தியுஞ் சைவப் பான்மையு முடையவென்குருவே.

சிவராஜயோகி

## தி. ம. மாணிக்கசெட்டியாரவர்கள்

இயற்றியது

செந்தமிழ்நூல் கல்வியினி லுறுபெருமை யனைத்தினையுஞ் செவ்வே காண
உந்திறமென் மனமதனி லேயடைத்திங் கெனையாண்ட வுயர்கோ மானே
விந்தைமிகு மத்துவித சித்தாந்த சரபமென விளங்கு வோனே
எந்தைநிகர் பூவைவரு கலியாண சுந்தரநின் னிருதாள் போற்றி.

அக்கவுண்டண்ட் ஜெனரல் ஆபீஸ் லோக்கல்பண்டு ஆடிட்டர்

## வித்துவான். நின்றை. தங்கவேலுமுதலியாரவர்கள்

இயற்றியது

பொய்கண்ட புறச்சமயர் புரளியினில் மயங்காமே புனித மான
மெய்கண்ட சாத்திரத்தி னுண்மையையென் னிதயத்தில் விளக்கி வைத்த
கைகண்ட வவதானிக் கலியாண சுந்தரநற் கவிஞர் சிங்கம்
ஐகொண்ட வென்னுள்ளக் குகையதனி லெந்நாளு மமரு மாதோ.

## சிட்டத்தூர். தங்கவேலுமுதலியாரவர்கள்

இயற்றியது

படர்ந்தெழுமென் மனமெனுமோர் நிலந்திருத்திச் செழுந்தமிழாம் பைங்கூழோ[ங்குத்
இடம்பெறவே வளர்த்துதன்கண் ணுறுபயனுஞ் சிவஞானத் தீஞ்சு வைப்பால்
மடமகற்ற மகிழ்ந்தளித்தோன் சித்தாந்த சரபமெனும் வள்ள லையன்
அடரவதா னிப்பூவைக் கலியாண சுந்தரனல் லடிக்கீழ் வாழ்வாம்.

இளையனூர்வேலூர்

## வி. கே. முத்துமாணிக்கமுதலியாரவர்கள்

இயற்றியது

சீதமல ரினைத்தேடித் தேன்வண்டு பற்பலவாச் சேர்தல் போலப்
போதமுறு நின்றன்னை மாணவர்க ளெண்ணிலர்கள் போந்து ஞான
நீதமுறு சித்தாந்த நயந்தேறிச் சைவரென நிலைத்திட் டாரால்
ஓதரிய மணவழகே யுன்பெருமை யென்னவகை யுரைக்கற் பாற்றே.

பிக்காவல் சப்ரிஜிஸ்ட்டரார்

**சால. மாணிக்கம்பிள்ளையவர்கள் B. A.**

இயற்றியது

கைம்மாறு கருதாமற் கல்வியினைப் போதிக்குங் கருணை வள்ளால்
இம்மாநி லந்தன்னிற் சிவமணமே மணிகமழ வியற்று மேலோய்
அம்மாநிற் கேதகுமால் சித்தாந்த சரபமெனு மரிய பட்டம்
கம்மார்ந்த பூவைவரு கலியாண சுந்தரவென் கருத்தின் வாழ்வே.



மோசூர். பொன்னம்பல முதலியா ரவர்கள் குமாரர்

அக்கவுண்டன்ட் ஜெனரல் ஆபீஸ்

**மோ. கந்தசாமிமுதலியாரவர்கள் B. A.**

இயற்றியது

திருவருட் பிரகாச வள்ளலா ரருட்பாவிற் றிளைத்தற் கேற்ற
கருவமர்வை திகசைவ சித்தாந்தப் புலமையினுன் களிக்கச் செய்து
வருமெனது மோமானை ஞானமிகு சமானை மதிபூ மானைத்
தெருள்வளர்நற் கலியாண சுந்தரப்பே ருடையானைச் சிந்தித்துய்வாம்.



"ஞானகாந்தி" "தசாவதி" "காதல்" மதிமாலினி" முதலிய வியற்றிய

**செ. யம். இராஜாசெட்டியாரவர்கள் M. B. P. T.**

இயற்றியது

பன்னரிய செந்தமிழ்நற் கடற்படிந்து பொருணீரைப் பருகிச் சான்றோர்
உன்னியுறை சென்னைநகர்க் குவட்டேறி மாணவர்க ளுளம்பொ ழிந்து
மன்னணியகல் விப்பயிரை விளைவிக்கு மேகமென வதிந்து வாழும்
என்னருமைப் பூவைநகர் மணவழகு பல்லாண்டிங் கினிது வாழ்க.



சென்னைக் கவர்ன்மெண்ட் பிரெஸ்

**ஆரணி. சுப்பராயமுதலியாரவர்கள்**

இயற்றியது

அண்டர்நா யகனருளை யேநாடி பூதிமணி யணிந்து வாழும்
தொண்டர்பணி யேசிறந்த மோட்சசா தனமென்னச் சுருதி கூறித்
தெண்டமிழிற் பிரசங்க மேசெய்து தெளிவிக்குந் திகழு ஞான
கொண்டனிகர் கலியாண சுந்தரன்றாள் கனவினிலுங் குறித்துவாழ்வாம்:



# குருதோத்திரம்.

ஜோசியப்புலமை
## வா. கோபாலுமுதலியாரவர்கள்
இயற்றியது

வாக்கதனிற் சனிராகு வாய்க்கப்பெற் றிருத்தலினால் வரையு முன்றன்
பாக்களினால் வாழ்த்திடினும் வைதிடினும் பலித்திடுமால் பாரி லுன்னைத்
தாக்கியுயர் கல்வியினில் ஜயித்திடுவா ரொருவரிலை தச்ச ஞான
ஆக்கமுறும் பூவைநகர்க் கலியாண சுந்தரநின் னடிகள் போற்றி.

---

தமிழ்ப்பண்டிதரும், சைவபுராணிகருமாகிய
## கா. இ. சிதம்பரசாமிபாண்டியரவர்கள்
இயற்றியது

சீர்பூத்த சென்னைமுதற் சேதுவரை புகழ்நாட்டிச் செகத்தின்மீது
கார்பூத்த புறச்சமயங் கலங்கிடவே கலைஞானங் கனமாய் மேவி
ஏர்பூத்த சித்தாந்த சரபமவ தானியெனு மெழினற் பூவை
ஊர்பூத்த கலியாண சுந்தரமென் குருமேன்மை யுரைக்கற் பாற்றே.

---

பிரசங்கரத்நாகரம் சிதம்பரம் வடிவேற்பிள்ளை யவர்கள் குமாரர்
## சி. வ. தணிகாசலம்பிள்ளையவர்கள்
இயற்றியது

சித்தாந்த சரப மட்டாவதா னிப்பெயராற் சிறப்புற் றோங்கிப்
பித்தாந்தப் புன்சமயர் பிணக்கறுக்கப் பேருலகிற் பெரிதும் போற்று
முத்தாந்த மின்னதெனை மெய்கண்ட சாத்திரத்தால் முடிவைக் காட்டுஞ்
சுத்தாத்து விதஞானி கலியாண சுந்தரன்றாட் சுகித்து வாழ்வாம்.

---

## சே. தெய்வசிகாமணிசெட்டியாரவர்கள்
இயற்றியது

எந்நாளுஞ் சித்தாந்த வுண்மையினை யெவர்பாலு மெடுத் துரைக்க
முன்னாக வந்துவை திகசைவ பிரசங்க முறையே செய்யு
மன்னாகு மவதானிக் கலியாண சுந்தரனா மாதவத்தன்
பொன்னான செஞ்சரணை நெஞ்சார வாழ்த்துவதென் புண்யந் தானே.

---

புராணப்பிரசங்கம்
## இ. தங்கவேற்பிள்ளையவர்கள்
இயற்றியது

பட்டாங்கி லுறுபுலவர் பதிபசுபா சப்பொருளைப் பண்பிற் றேரச்
சுட்டாய சுத்தாத்து விதவுண்மை போதிக்குஞ் சுகுணம் வாய்ந்து
தெட்டார்ந்த சித்தாந்த சரபமெனப் புகழோங்கித் திகழும் பூவை
யட்டாவ தானகலி யாணசுந் தரனடியை யகத்துள் வைப்பாம்.

"இராமலிங்கம்" "அருட்பிரகாசம்" "அருளானந்தம்" "சிதாகாசம்"

முதலிய ஆங்கிலத்தி லியற்றிய

## திரு. சாம்பசிவமுதலியாரவர்கள்

இயற்றியது

அருட்சார்நற் பெருந்தகையி ராமலிங்க வள்ளலடிக் கன்பு பூண்டு
பொருட்சாரு மாங்கிலநூ லியாணியற்றப் பலவகைசற் போத நல்கித்
தெருட்சார்ந்த சித்தாந்த சரபமென வேபுவியிற் சிறப்ப நின்று
மருட்சாரென் வினையகற்றுங் கலியாண சுந்தரப்பேர் மகிப வாழி.



சிவரம் மகமதியர் எலிமெண்டரி ஸ்கூல் உபாத்தியாயர்

## வா. தி. மாசிலாமணிமுதலியாரவர்கள்

இயற்றியது

பொன்னுருஞ் செஞ்சடையெம் புண்ணியனை மறையனைத்தும் புகழத் தக்க
தென்னுருந் தெய்வமெனப் புறச்சமய ருளநாட்டுந் திரம் வாய்ந்த
மன்னுகு மணவழகே குணவழகே மதியழகே மனத்தி லுன்னை
எந்நாளு மேயெண்ணி யுன்பெயரே மந்திரமா யெண்ணு வேனால்.



M. & S. M. ரெயில்வே சிப் ஆடிட்டர்ஸ் ஆபீஸ்

## மணி. வே. நடராஜசெட்டியாரவர்கள்

இயற்றியது

மன்னியநற் சைவபுரா ணங்களினி லேவிளங்கு மகிமை வாய்ந்த
பன்னரிய காதைகளைச் சித்தாந்தப் பார்வையினும் பார்த்துத் தேற
நன்னயமாப் போதிக்கு ஞானசிகா மணியாகி நாளுங் கல்வி
மன்னனென வொளிர்பூவைக் கலியாண சுந்தரனின் மலர்த்தாள் போற்றி



மகாஜனோபகார சங்க உதவி காரியதரிசி

## கா. ஐம்புலிங்கமுதலியாரவர்கள்

இயற்றியது

தந்தைதன் சுதனிடத்தில் வைக்கின்ற வன்பெனத் தயவா யென்றன்
புந்தியினி லேயமையச் சிவபெருமான் பரத்துவநற் புகழனைத்தும்
விந்தையுறப் போதித்துப் புறச்சமயப் படுகுழியில் வீழா தாளும்
சந்தமிகு பூவைநகர்க் கலியாண சுந்தரன்றாள் தலைமேற் கொள்வாம்.



# குருஸ்தோத்திரம்.

காணியம்பாக்கம் ஜோசியர் இராகவமுதலியாரவர்கள் குமாரர்

**ஜோசியம் கா. சொக்கலிங்கமுதலியாரவர்கள்**

இயற்றியது

சூரியன்சுக் கிரன்கேது மூவருமுச் சங்கனோனத் துலங்கப் பெற்ற
சீரியனே முத்தமிழ்க்கு முதல்வனென வேவிளங்குஞ் சிறந்த ஞான
வீரியனே வியன்றுதை யேயென்ன வித்தையினை மிகப்போ திக்கும்
ஆரியனே பூவைநகர்க் கலியாண சுந்தரநின் னடிகள் போற்றி.

---

சிவரம் - அருணசல ஜோசிய ரவர்கள் குமாரர்

**சி. பஞ்சநாதஜோசியரவர்கள்**

இயற்றியது

ஞானகு ரியன்சாந்த சந்திரன்வாக் கினிற்செவ்வாய் நண்ணு வோர்க்கு
மோனநிலை யூட்டுபுதன் கலையனைத்து நிறைவியாழ முறைமிகுந்த
தானகீர்த் தியில்வெள்ளி புன்சமயர் சனியென்ன வவதரித்த
தேனடரும் பூவைநகர்க் கலியாண சுந்தரன்றாள் சிந்திப் பேனால்.

---

தின்னனூர் - வையாபுரி முதலியா ரவர்கள் மனைவியார்

**ஸ்ரீமதி. அகிலாண்டநாயகியம்மாள்**

இயற்றியது

சின்னவய தேமுதலாய்ச் சீராட்டி யெனைவளர்த்தாய் சிறந்த கல்வி
நன்னயமும் போதித்தாய் கவிபாடுந் திறத்தினையு நண்ணச் செய்தாய்
என்னரிய மாமணி தந்தைநீ குருவுநீ யிறைவ னீயே
மன்னியநற் பூவைகலி யாணசுந் தரநின்னை வழுத்து வேனால்.

---

வா. தி. கோவிந்தராஜ முதலியா ரவர்கள் மனைவியார்

**ஸ்ரீமதி. ஜெயலட்சுமியம்மாள்**

இயற்றியது

மன்னியசற் குருமணியே மாசைவ சிகாமணியே மனங்க ளிக்கும்
பன்னரிய கவிமணியே கற்றோர்கள் கண்மணியே பலதே யத்தும்
உன்னுபுகழ் விண்மணியே பிரசங்கம் பொழிமணியே முதிர்ந்த ஞானச்
சொன்னயமார் கலியாண சுந்தரப்பேர் மணியேயுன் றுணைத்தாள் போற்றி.

---

சிதம்பரம். மௌனசுவாமி மடத்தடிமை

**ஸ்ரீமதி. சிவகடாட்சம்மாள்**

இயற்றியது

கல்வியையென் கணவர்க்கு மெளியேற்குங் கற்பித்துக் கயிலைக் கௌரிச்
செல்வியையென் னிதயத்தி லேயிருத்தி யுபாசிக்கச் செய்வித் தென்றன்
வல்வினையைக் கரைத்திடவும் வரும்வினையைத் தடுத்திடவும் வகைபுரிந்த
பல்விளைவி லுயர்பூவைக் கலியாண சுந்தரன்றன் பாதம் போற்றி.

---

சென்னை வேப்பேரி எஸ். பி. ஜி. ஐஸ்கூல்

தமிழ்ப்புலவர்

**மணிமங்கலம் திருநாவுக்கரசு முதலியாரவர்கள்**

இயற்றிய

# பாவலராற்றுப்படை

## வெண்பா

உற்ற தனிக்கோடு மோங்கார நல்வடிவும்
பெற்று விளங்கும் பெருங்களிறே—யிற்றைநாள்
பாவலராற் றுப்படையைப் பண்புகெழப் பாடவே
யாவலொடு மேவா யகம்.

## (புலமை பெற்றுவந்த இளைஞ னெதிர்வந்த இளைஞனை விளித்தல்)

நேரிசையாசிரியப்பா

நனந்தலை யுலகி னன்கனம் வருந்த
வினந்தலை சிறக்கு மெண்ணிற் பிறப்பிற்
ருெக்க பொருணிலைத் தோமற நாடு
மக்கட் பிறந்தை மாண்புமிக் கதுவே
உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றெனும்
பொய்யிற் பொருளுரை புந்தியு ணிறீஇக்
கையினி லேடு கவினுறத் தாங்குபு
வாடிய மெய்யுட னூடிய விழிகளும்
10 பேரூர் நெடுநாட் பெரிது குடியிருந்த
வீர மில்லா வெழிற்றபு முகனு
மிடுக்கட் பார்வையு முலறிய கதுப்பு
மிடுக்கறு தோற்றமு மென்மைதீ ரிதழும்
பொருளது குறியா மருள்படு முரையுங்
காலோய் நடையிற் கோலேய் தயிரிற்
கலங்கிய நெஞ்சொடு கவலைகை நீங்கி
வலங்கொள வயின்வயின் வறிதே திரிதரு
மிளைஞ ரேறே கிளக்குவல் கேண்மதி

(எதிர்வந்த இளைஞன் நுதலியது வினாதல்)

வளைவி லாகூழ் விளைவி னீயு
20 மாற்றெதிர்ப் பட்டனை யாற்றல் பெற்றனையா
லளியை நீயென வருளுறு மனத்திற்
றெளியும் பெற்றியிற் றெரிக்கும் வாய்மொழி
யுள்ளுறக் கொளீஇ யுய்குவை யுய்குவை
கள்ளங் கடந்து காமுறு மிளமைப்
பருவ மிமைப்பிற் பாங்குறக் கழியு
மொருமை தெருண்டுநீ யினியே படர்குவை
கல்விப் பெருவளங் காட்சி நனிமிக
வல்லே பெறநீ வாய்ந்த நற்குரவற்
காணா வியல்பிற் கலங்கினை கொல்லோ
30 மாணாப் புலமை மாக்களைக் குறித்துப்
பேணா தவரைப் பெட்டாங் கியலா
வாணா வழூப்படு மவமுற் றனைகொல்
மிடிகுடி கொண்ட மடியா மாக்களை
நணுகுபு வலவ நவையுற் றனைகொல்
பொன்னே பொருளாப் போற்றுறு மாக்களைக்
கொன்னே யணுகிக் குறையுற் றனைகொல்
நுழைபொரு டமக்கென நுவலா திருக்கும்
வழுவுறு வோரான் மாழ்கினை கொல்லோ
திண்ணிய வழக்கா றென்னுந் திறப்பேய்
40 நண்ணிய சிலபொரு ளாவின்றே பின்னர்
சொல்ல வுளங்கொளாத் தோமுறு வோரா
னல்லற் பட்டே யணங்கினை கொல்லோ

அதாஅன்று

இலக்கிய நிறைந்தோ ரிலக்கணம் பொலிந்தோர்
நலம்படு மெண்ணா நவையறத் தேறுநர்
கலம்படு சாத்திர கைபோகு கேள்வியர்
நூலு நுழையா நுண்ணிய வறிவினர்
சாலு நூனெறி சாற்றுந் தகைமையர்
கட்புலப் படாத நற்றவக் குறையோ

(கல்வியின் மாட்சிதெரித்தல்)

விளம்பழங் கடிக்கும் வளம்படு வையத்
50 துண்மை யின்மை யுளங்கொள வேண்டின்

கண்ணெனப் படூஉங் கல்வி யின்றே
லளந்தறி மதுகை யாற்றின்வா ராது
களங்கனி நிகர்த்து விளங்கெழில் வீங்கு
நீல கண்டத் தாலமர் செல்வ
னருளறம் பூண்டே யல்லாந் திருப்ப
விருநீர் வேலி யிம்பரி னுகரு
மெய்வாய்கண் மூக்குச் செவியென வழுத்து
மைவா யின்ப மடைதலு மரிதே

அதாஅன்று

வேறுவேறு மாறுகொ ளியற்கை
60 யவனியின் வியப்பை யறிதலு மரிதே
யரூஅ யாண ரியல்பினிற் பெரூஅக்
கல்வி யெனப்படூஉஞ் செல்வ மடமக
ளெழிலெலாந் திரண்டோ ரின்பமே யுருவாய்த்
தழுவும் பருவமுந் தன்மையு மேவரப்
புதுநலங் கனிந்து முதுபே ரின்பங்
கதுமெனக் கழியுங் கடைப்படு மின்ப
முனியா வெறுப்பிற் கனியா தளிப்பச்
சமைந்து கிடந்தனள் சார்பு பெறினம்ம
யிம்மை யின்பமு மம்மைப் பேறுஞ்
70 செம்புலச் செல்வமுஞ் செறிகுவை யன்றே

(இசைப்புலவர் இயல்புரைத்தல்)

புலத்துறை முற்றிய பெரியர் சீர்த்தி
வலத்தா லுரைத்தல் வாய்வ தன்றே
நல்லிசைப் புலமை நக்கீர தேவெனுந்
தொல்லிய வுலக மின்றுநா துளக்குந்
தொலையாப் பெயரமை கலைமாச் செல்வன்
வால்வெள் ளேறு வகைபெற வுகைத்துச்
சேல்பிறழ் கருங்கட் செவ்வாய்ப் பசுங்கொடி
யறிவு பழுத்த வருமறை முகிழ்முலைச்
செறிதர விடபாற் சேய்மை யண்மை
80 கடந்த பொருளின் கடவுட் பாடல்
குற்ற மென்னக் குறித்தன னின்று
முற்ற நாட்ட முன்னுரைப் பானேல்

கற்றவர் பெருமை சொற்றலு மெளிதோ
வற்றவ ரியல்பினி தறிதிநல் லண்ணா

(கேட்க என்று நயம்படக் கிளத்தல்)

லிற்றைநா ளீயு மினிதே படர்ந்து
வேண்டிநர் வேண்டியாங் செய்துஞ் சிறப்பிற்
காண்டகு காட்சியுங் கைவரப் பண்ணுங்
கடவுட் பேணிக் கவலை கழிப்பித்
திடமுறு நெஞ்சிற் சேறியென் செல்வ
90 நன்மை கிளருமுன் நல்வினைத் தானு
மின்றே பலித்த தின்றே பலித்தது
வீவில் விழுச்செல்வங் கல்வி யென்றே
தாவில் வேணவாத் தாங்குறப் பெற்றுப்
பிற்றைநிலை முனிந்து கற்றல்கை விட்டோர்
பாற்கடற் போலப் பரந்து கிளர்தரு
நூற்கடற் றனிற்படீஇ நுவலுந் திவலையிற்
சிறிதுகற் றளவில் வெறுத்தனர் பலரே
உலகநூ லொன்றே யலகில கற்று
நலம்படா வினையரு நனிபல ரேகா

(தன்வரலாறுகூறல்)

100 ணன்ன நீர்மை யணுகா தொழியப்
புன்மை யகல்பு புலமை மீக்கொள
வென்வர லாற்றை யியம்புவ லைய
நயம்படு நன்மொழிப் பயங்கெழக் கேளிசி
னியங்க ணிலையெனு மியற்கை யிரண்டு
ளடங்கலு மொடுங்கு மவனியின் கண்ணே
யியற்கை செயற்கை யினிதி னுணரக்
கல்விக் கருவியைக் காணா தலந்து
தொல்வரம் பழியா நல்லா சிரியரைத்
துருவித் துருவித் தொலைந்தன நெடுநாள்
110 பின்னாட் சிலரைப் பெட்பி னடுத்தே
பின்னிழற் புரைந்து பிரியாது வைகி
யாணை போற்றி யடங்குபு வொழுகிப்
பொன்னுந் தூசும் பொலிவன நல்கி
யன்பு கெழீஇய வையெ னுளத்தொடு

பூசனை யாற்றியு மாசி னூற்பொருட்
புலப்படத் தெருட்டாப் புன்மையிற் புலர்ந்து
பலபக லொழிந்தன பண்பிலா மாக்கள்
மரபுநிலை திரிந்து மதியறை போகி
விரவுறு மிலக்கிய விலக்கண வியனெறி
120 கற்றுக்கை போகாக் கடையரிற் கூட்டத்
தெற்றன வவருழிச் செல்லா தொழிந்தேன்
நீடு நினைந்து வாடுபு கிடந்தனன்
தமிழின் றலைவ னென்று தலைப்படு
மமிழ்தெனப் பொருள்வள னறிவ தென்றுகொல்
பேது நீங்கப் பெறுவ தென்றுகொல்
கோது நீங்கிக் குலவுகந் தமிழின்
செம்பொருள் கண்டு செம்மாப் பன்கொ
லென்று பலபட வெண்ணுபு கிடந்தேன்

(தலைவற் காண்டலும் தமிழ்பயிறலும்)

மென்மை தழீஇய மேதகு கன்னிப்
130 புதுமை தமிழ்க்கோர் புதுவிளக் கெனவரு
தோன்றலைக் கண்டு தொழுதுவாய் திறந்தே
யான்றுவெறு கேள்விய னகஞ்செவி மடுப்பப்
பட்டாங்கு கிளப்பத் தட்டாது கேட்டு
முட்டாட் டாமரை முழுமலர் நாப்பண்
கட்டெழி லெறிக்குங் கடவுளி னிருந்தனன்
தண்டா விருப்பின் றனிநகை புரிந்து
கண்டென வினிக்குங் காமர் தீவியம்
புலமையின் றெளிவும் புகற்சியுந் ததைய
நலமுற மிழற்றிக் குலாவின னன்றே
140 யாண்டகை பின்ன ரருளுடனோக்கி
மாண்டெழின் மாமணி மகிழுறக் கோத்த
நன்மணிக் கோவையிற் சொன்மணி யாத்துப்
பத்தி பழுநிய பழுதொழி காட்சிக்
கைத்தலங் கனியெனக் காட்டுபு வீட்டின்
வித்தக வாழ்வை விரைவி னளிக்குறூஉம்
பழிதபு கயற்கட் பாவை மகத்தமிழ்
கழியவு மின்புற வன்றே கழறினன்
சொற்றொறுங் காட்டிய சொல்வளப் பொருள்வளப்

பெற்றி வழுத்தவும் பெரிது பெரிதே
150 நாடொறு மவனுநா னவிலு மாலையன்
நீடுற யானு நித்தல்போம் பெற்றியன்
பன்னாள் பலருடன் பல்காற் சென்றும்
முன்னாள் போல முழுவிருப் பினனே
முற்பகன் மலர்ந்து பிற்கூம் பாம
விரவலர்க் கென்றுங் கரைமனத் தினனே
யானு விருப்பி னறைந்தனன் பன்னூல்
னோறு வுடம்பி னொசிவுங் கூறினன்
முப்பொருள் விளக்கு முறைமையிற் சான்ற
செப்பறு புகழுறு சிவஞான போத
160 திப்பிய நூலின் றிறமும் புகன்றன
னொப்புறு நூற்பொரு ளொப்பு முரணு
மாறுகோ ளின்மையு மயக்கறுத் தலுமென
வேறுவேறு நுண்பொருள் வேண்டி வேண்டி
யருளா ரமுதுட னளியக் குழைத்துப்
பொருளா லூட்டினன் புந்தி நிறுவப்
பசுமரத் தாணி யறைந்தெனப் பகர்ந்தனன்
வசியுறு மரபின் வகையினிற் சிறந்த
வுள்ளுறை யுவமு மேனையுவ மையுந்
தெள்ளு மிறைச்சி செழும்பொருள் வண்மையும்
170 செம்பொருட் குறிப்புச் சேரிலக் கணப்பொருள்
வெம்புமெய்ப் பாடென விளங்குமெப் பொருண்மையு
மன்பொடு கொளுவி யருளின னதனாற்
றசும்பு ணிறைந்த தண்ணீர் சிவண
வசியார் புலமை வைகிச் செறிந்தன
னென்போ னீயு மேத்துபு குறுகித்
துன்ப மொழிந்து துலங்குவை மன்னே

(தலைவற் பெற்றோர்)

தாளாண் வாழ்க்கை வேளாண் மரபினில்
காசறத் தோன்றிய மாசறு கேள்வியன்
செந்நாப் புலவர் செழுந்தீம் பாடல்
180 மன்னு மாலையொடு மலர்ந்த மார்பினன்
குவளைத் தொடலைத் திவளுந் தோளின
னழகு பழுத்தினி தொழுகு மேனிய

னமுதம் பிலிற்று மாசறு கேள்வி
தமக்கிணை யில்லாத் தமிழ்வரம் பாகுந்
தெய்வச் சேக்கிழார் செவ்வாய் மலர்ந்த
தொண்டர் புராணத் தொண்டிறலடியவ
ரறுபான் மும்மை யருள்செறி மயிலை
திருத்தலம் வதிந்த புரைசால் வாயிலார்
வரத்தகு கால்வழி யுருத்த வும்ப
190 லலமரு பிறவி யாழியைக் கடக்க
நற்புணையாக நற்றவக் கொடியெனும்
பொற்பார் வடிவாம் பிகைதாட் பேணும்
பல்புகழ் சென்னவ ராயகோத் திரத்துச்
செல்வக் குரிசில் செம்மொழி யாளன்
அண்ணுசாமிமா லருந்தவப் புதல்வன்
உண்ணுமுலையின் வயிறு வாய்த்தோ
னுள்ளக் கிழியி னுருவினைப் பொறிக்கத்
தெள்ளத் தெளியத் தெரிக்குவல் கேண்மோ

(தலைவன் உருவ முதலியன மொழிதல்)

குறுமை நெடுமை குறியா வடிவினன்
200 துடியமை மேனியன் றுளக்கறு நெஞ்சினன்
பரந்தொளி பரப்பும் பளகறு நுதலின்
வரந்தரு புண்ணியம் வாய்த்த தெமக்கெனக்
காணுநர் கூறப் புண்ணிய நீறு
பூணுறுஞ் சைவ மங்கலம் பொலியுந்
தாமரை யகைந்தெனக் காமரு முகத்தின
னருள்குடி யிருக்குந் தெருள்பெறு விழியினன்
கேள்வி வெறுத்த கேழ்கிளர் செவியின
னுண்ணுணர்வு கண்ணிய நீண்ட நாசியன்
சிவமணங் கமழுந் திருவாய் மலரின
210 னவரசங் கொழித்துக் கவின்ற நாவினன்
காண்போர் கண்ணுங் கருத்துங் கவர்பு
மாண்பி லாணவ மதிதிறை கொள்ளு
மாடகம் புனைந்த வக்கமா மணியின்
பீடமை மாலை பிறங்கு மார்பினன்
கொட்டைக் கரையப் பட்டுத் தூசினன்

சைவ சிகாமணி தைவிக நன்மணி
திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தி
யெவ்வெவர் தம்மையு மவ்விய மின்றி
யாட்கொளு மான்றோ னருளுரு வினனே
220 கோட்டமில் மனத்துக் குணப்பெருங் குன்றம்
பன்முறை கேட்பினுந் தன்மனம் வெகுளான்
தகவில கூறினுந் தான்முனி யானே
யிகழுநர்த் தாங்கலு மியல்பி னமைந் தோனே
திகழு நுண்ணறிவின் றிண்மை பெற்றோன்
வழுக்கியும் பிறர்நவை வாய்மொழி யானே
வைதிக சைவம் வளர்க்கும் வான்முகில்
மைதிகழ் கண்டன் மலரடி தம்மைத்
தலையணி யாகத் தலைகொண் டவனே
மான்றோல் தைஇயிய மாணு விருக்கையிற்
230 றேன்றோய் நூற்களின் தேற்றந் தெரிக்குஞ்
செவ்வி வழுத்துவல் செவ்வனங் கேண்மதி

(தலைவன்பால் நூற்பொருளுணருநர்.)

பதிபசு பாசப் பழம்பொருள் கேட்குநர்
விதியுளி தத்துவ வியனூல் படிக்குந
ரன்பென் குழவி யழுகுற வளர்க்குறூஉஞ்
சின்மய புராணஞ் செவியிற் பருகுவோர்
பருகு வன்னத் திரியா நோக்குட
னுவிய மெய்ப்ப வாவலிற் கேட்போ
ரளவை நூலி னளவினை யறிவோர்
மறைப்பொருண் முழுவதூஉ மறையிற் கேட்குந
240 ரிலக்கணம் படிப்போரிலக்கியங் கற்போ
ரலக்கண் டபுக்க வையந் தெளிவோ
ரத்துவிதப் பொருளி னளப்பி லுண்மைத்
தத்துவந் தேர்வோர் தவநிலை யுணர்வோர்
சித்தர் நூலின் சித்தந் தெளியுந
ரின்னோர் பலரு மீண்டிய குழுவிற்
பன்மீ னடுவ ணன்மதி போல
விருந்தோற் குறுகினீ யினியன கூறின்
விருந்தென வுன்னை விழைவுட னேற்பன்
போகென விடுக்கும் புன்மைய னல்லன்

(தலைவன் ஆட்கொளு முறைமை கூறல்)

250 தூய முத்தெனத் துவர்வாய் முறுவல்
சிறிதே தோன்றச் சிறுநகை புரிந்துன்
னென்புங் குளிர வினியன நிகழ்த்தித்
தன்னடித் தொழும்பருட் சாலவுங் கொள்வ
னிலக்கிய விலக்கண மெல்லாங் கொளுவுவன்
கலக்குறுஞ் சமயக் கணக்கையுங் காட்டுவன்
சமயா தீதத் தனிப்பொரு ளுணர்த்துவ
னமையா மதங்களி னவலமுந் தெரிக்குவ
னிறைவ னின்னருட் டுறைகுளிப் பிப்பன்
பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
260 பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
தற்றே ருறுவ தென்னு மருண்மொழி
யிற்றென விசைச்கு மியல்பும் விளக்குவன்
முத்தமிழ்ப் புலமையு முறைமையிற் பெறுகுவை
வித்தக ஞான விழுப்பொரு ளடைகுவை
பாவல னகுவை நாவல னகுவை
யறம்பொரு ளின்பம் வீடெனு மிவற்றின்
றிறமு மறிகுவை தீது மொழிகுவை.

(தலைவன் ஆசிரியன்மார்)

சொர்க்க புரத்துத் துகடீர் காட்சியி
270 னர்க்குநூற் பரப்பெலா மாற்றலிற் கடந்து
கல்வி வீரனுஞ் சொல்வரம் புணர்ந்த
இராம லிங்க வின்னிசைப் புலவன்
விராவுறு மன்பின் விளக்கிய கல்வியன்
தொல்காப் பியமெனுந் தொல்லிலக் கணத்தை
யெழுத்தொடு பயின்ற வழுத்தபு புலவன்
பேறைக் கோமான் பேர் ஜகநாத
னீறு கலைக்கடல் முகந்துணுங் கொண்மூ

(தலைவன்புகழ்மை)

பளிங்கென விமைக்கும் பதமுறு நெஞ்சின்
நீற்றுக் கடனாற்று நிலையுறு மன்பன்
280 மாயா வாதப் பேயர் தம்மையு

மிறைக்குண மில்லா விழிகுணச் சிறுதே
முறைமை யறியா மாக்கள் தம்மையுந்
தெருட்ட வாங்கவர் பேதமை கந்தைக்
கருத்திற் களைந்த வீரசூ ளாமணி
சைவ நல்விதைத் தகவுற வித்திக்
கைவரு ஞானக் கவின்முளை செழித்துப்
பத்திவி ருக்கத்திற் பகர்சரி யைமுதல்
நத்துறு வழிக ணான்கு மரும்பொடு
மலர்காய் கனியெனச் சிவமணங் கமழ்ந்து
290 கலமென நீற்றுக் கவசமாங் கவின்பெறச்
சேறு முராஞ்சிய முத்திச் சாற்றை
யூறு தீர்ப்பா னுள்வாய் மாந்தச்
செய்யும் பான்மையிற் சிவமடம் பலவினும்
மெய்புக ழோங்கி மேன்மைபெற் றனனே
பொய்ப்பொரு ணீங்கி மெய்ப்பொருட் கண்ட
மெய்கண்ட தேவன் மேவுசந் தான
செழுமைசே ணவிருந் திருவா வடுதுறை
கொழுமைவாய் மடத்திற் குறையாப் பரிசின

(தலைவன்பால் நூல் கேட்போர்)

ணண்டகை தன்பா லமிழ்தம் பிலிற்று
300 நூலுணர் மாண்வர் நுவலவும் பலரே
சாலுங் கவியிற் சதுரர் பலரே
புராண பிரசங்கம் புரிகுநர் பலரே
தத்துவ நுட்ப வித்தகர் பலரே
மாணவை மன்னுறு மாட்சியர் பலரே
புலவ ரவையிற் புலவர் பலரே
சமயத் தொகுதியி னமைபவர் பலரே
துறந்தோர் பலரே சிறந்தோர் பலரே
கரைமிடற் றந்தணன் கைகாட் டமைந்த
மறைப்பொருள் சைவ மாட்சி தெருளாது
310 புறப்புறச் சமயம் புக்கவர் பலரை
முன்னிலை நிறீஇய முதல்வர் பலரே

(தலைவன் இயற்றியநூல்கள் முதலியன)

பொன் முளைத்தற்ற பூரித் தெழுமுலை
நுளைச்சியர் விழிக்கு நுணங்கு கெண்டை

வளைமுந் நீர்புக்கு வருந்தி முழுக்கிருக்குந்
திருவான் மியூர்ப்புராணந் திவ்விய நவரச
மருமையிற் கெழுமவவ் வழகினிற் சொற்றோன்
சித்தாந்த பூடணை முத்தாந்த நூலை
யுலகிற் கருளிய வலகிற் புகழோ
னொற்றிக் கலம்பகம் வெற்றியிற் சாற்றினோன்
320 தருக்கசோ பானந் தகவுறத் தந்தோன்
செய்யு ளிலக்கணம் வையக் களித்தோ
ணின்னண மாக வெண்ணூறு நூல்கள்
நாற்பான் மேலு நவின்ற நாவல
னென்கண் மாமணி யென்னுள் ளொளிர்மணி
யென்னுயிர்க் குறுபய னென்பிணி மருந்து
சைவ மங்கலத் தனித்தவக் கொழுந்து

(தலைவன் பெயர் முதலியன)

கல்யாண சுந்தரக் கவிஞ ரேற்றை
நல்விதி கூட்டிய நலத்தை வியந்து
கண்குளிரக் கண்டு கைம்மலர் கூப்பி
330 யுண்மகிழ் துளும்ப வுவகையி னிடி
வல்லவா பாடி வைகித் தாணிழல்
பூணெனக் கழன்மலர் புனைந்து தலைமிசை
நாணெலா நீங்கி நலக்குவை தானே

(தலைவன் கொடையினை வியத்தல்)

பொன்னு மணியும் பூந்துகிற் பிறவும்
மன்னு மன்பின் மகிழ்ச்சி மிக்கு
வாரி வாரி மாரியின் வழங்குந்
தமக்கென வாழா தகைமையர் தம்முள்
காட்டிடை மயிற்குக் கலிங்கந் தந்தோ
னேட்டின் முல்லைக் கீந்த தேரினன்
340 சாத னீங்கத் தனிக்கனி நல்கின
னேதமில் கன்ன னெனும்பல வீகையர்
கொடைப்பய னுடலினை யடைவே யோம்பு
மொருமைக் கன்றி யிருமைக் குதவாதா
லிவன்றன் கொடைப்பய னெழுமையு மூழின்

தவறுது தொடருந் தன்மையி னிவனே
வள்ளல் பலரையு மெள்ளி மேம்படுநன்
வழுவி லவன்கொடைச் செழுமையும் பெறுகுவை

(பாலி நதியின் சிறப்பு)

கண்ணகன் ஞாலக் கலிப்பகை மாற்றி
நண்ணுறு போக நந்தா தடைய
350 வமிழ்தென வகுத்த வணிவெண் கொண்மூ
விமிழ்திரை மேய்ந்தே யியம்பக் காரெனப்
பொலிந்து விசும்பிற் பொற்புறப் படர்ந்திவ்
வுலக முவப்ப மலிதுளி பொழிந்த
நிலமகண் முலையென விலங்குறு மடுக்கத்துத்
துயல்வரு மாரத் தியல்கெழு மருவி
யாறெனப் போந்தே யவனி புறந்தரூஉம்
வீறெலாம் விளக்கும் விளையுள் தேக்குந்
தீஞ்சுவைக் கலசத் திருவமிழ் தூட்டி
வாஞ்சையின் மகவை வளம்பெற வோம்பு
360 மன்னையே மானு மருநதி பலவினு
மன்னவே புரைந்தது மாபாலி தானே
தீம்பாற் சாறு திசையெலா நிரப்பிக்
கூம்பா வுளத்திற் குறையினை முடித்துத்
தேம்பொதி கிளவிச் செவ்வாய் கலைமகள்
பொதிநலங் காட்டித் துதைபய னளிக்கும்
பாலி யென்னும் பான்முளைப் பாவை
சீல மோங்குஞ் செந்நெறிச் செல்வி
யினிது புரக்கு மியலைந் திணைவளக்
கனிவுகட் டுரைத்தல் கடப்பா டன்றே

(குறிஞ்சி நிலவளம்)

370 நாடக மகளிரின் பீடுறு பிணைமுகம்
மயிலென் சாயன் மடந்தையர் களிப்பத்
தோகை விரித்தே யோகையி னுலும்
முழுவலி காட்டி மிழற்றுங் கிள்ளை
நாணுற் றேகப் பூணிணை முலையார்
மதுர வாசகம் பொதிதேன் துளிப்பின்

காரறற் கடுக்குங் கவின்பெறு கூந்த
லாரழ கெறிக்கு மணியார் பிறைநுதல்
சிலையின் வாங்கு சிதையா நல்லெழிற்
கலையிறை வாங்குங் கட்டெழிற் புருவம்
380 விழைவு விடுத்த விழுமியோ ருள்ளமும்
விழைவிற் றூழ விளங்கெழி லோங்குங்
குவளை மலரெனுங் கொழுங்கடை மழைக்கண்
தவலருஞ் சீர்பெறு தனிக்குமிழ் மூக்கு
பவளவள் ளத்திற் றவள முத்தெனச்
செவ்வாய்த் திகழுந் தெய்வ வனப்பி
னெவ்வாய் சிறந்தே யேந்தெழிற் றிரண்டே
செவ்விள நீரின் செவ்வியைத் தேய்த்துப்
பாற்கடற் றோன்றிய பதும முளையென
நூற்கடற் படியுநர் நுண்பொருட்டி ரளென
390 வீங்கிப் புடைதிரண்ட வியப்பார் திருமுலை
பாங்கிற் கிளிச்சிறை பணைத்தனப் பசுந்தோள்
நீல மணிபுரை நீண்மையி ரொழுங்கு
வேலைச் சுழியி னவ்வாங் குந்தி
சான்றோ ருசாப்போ லான்றொளிர் நுசுப்புச்
செக்கச் சேந்த தெய்விக மாமலர் *
வொக்கச் சிவணிய வொளிதிகழ் தாமரை
வருந்துநாய் நாவிற் பொருந்திய சீறடி
தெள்ளொழி லொழுகுந் தெய்வப் பாவை
கைவல் லோவியன் கைம்முயன்று புனைந்த
400 வோவியக் கொழுந்து வாவிநல் லன்ன
மயிலிளம் பேடை வியன்பொற் கொழுந்து
குறவர் பெருந்தவங் கோதிற் குருந்து
மறவர்கட் பாவை வள்ளி மடந்தை
போந்த பிட்டினைப் புகழ்ந்திறு மாந்தும்
வாய்ந்தபே ரன்பின் வண்ணந் திரண்டவ்
வன்பின் பிழம்பே யளியக் குழைந்துநல்
லின்பிற் புரைபுரை யினிதி னுருகிக்
கண்ணுத லப்பார்க்குக் கண்ணிடந் தப்பிய
கண்ணப்ப தேவர் கவினைப் புகழ்ந்தும்

410 நண்ணும் வேடர் நலமா றுறையுளும்
நாவலூர் முத்தமிழ் நாவலர் தமக்கன்
றாருயிர் மருந்தின் விருந்தி னருத்திய
கச்சூ ரென்னுங் காமரு பதியு
மிரும்பு திரித்தன மருப்பமை மான்கண
மின்புற் றாடு மியல்பும் பெற்ற
நற்பெருங் குறிஞ்சி சொற்பெறு நிலனும்

(பாலை நிலவளம்)

கல்லுணக் கொள்ளுந் தொல்லியற் றா துணைங்
காதற் பெடையுடன் கலந்தமர் நேர்மை
யேதமில் வானுறை பெய்தா வறங்கூரும்
420 குடுமிப் யாத்தி யடுக்கும் பாலையு

(முல்லை நிலவளம்)

முழுமதி மலைய முகமண் டலத்தினி
லெழுதுளி யமுத துளியி னிமைப்ப
விழிக்கடை சென்று வியனளை நோக்கச்
செழுவிய வேங்கைக் கொழுமல ருறழுஞ்
சுணங்கு பூத்த வணிமுலை யசைய
வணங்கு நுண்மருங் கணங்கு பொருது
கைம்மலர் சிவப்ப மைவளை யரற்ற
வாய மங்கைய ரங்கை வருத்தமும்
பூவைப் புதுமலர் புயல்வண் ணன்றுயர்
430 தொழுனை யாற்றினுட் டுரக்கும் பொலங்கொடிப்
பாவையோ டாடிய பல்புகழ் குரவை
யாப்பயன் தருபாக் காடுங் காட்சியும்
பூப்படு முண்கண் பூவையர் புணர்முலை
போகம் வேட்டுப் புல்லாங் குழலிசை
நாகனல் லணையாய் நற்றவப் பேறே
கன்று குணிலாக் கனியுகுத் தோயே
பொன்றுஞ்சு மார்ப புத்தெழி னல்லார்
பன்னிறத் துகிலும் பான்மையி னொளித்தோய்
துவரச் சேந்த பவளம் வாடக்
கோதிற் பாண்டுக் குலத்தினைப் புரக்க
440 தூது நடந்த துழாய்நன் முகிலே
முந்நீர் வண்ண முகுந்த மாதவ

வென்ற வாய்ச்சிய ரின்னெடுத் தேத்தும்
முதிர விளங்கிய கதிதரு முல்லையு

(மருத நிலவளம்)

நீலக் கொண்மூ நின்றுகு ழிருக்கையின்
கோல வெண்ணிலா குளிர்ப்பத் தோன்றியாங்கு
குவளைக் காட்டிடைக் கொழுமட னீக்குபு
தவள வோதிமந் தனிநடை புரியத்
தெண்ணீர் திரட்டுந் தேர்நல மடவார்
கண்ணீர்க் கொவ்வா கழுமலர் பறித்தவர்
450 கைம்மல ரேந்துங் கண்கொளாக் காட்சியி
லைம்மல ரவிழ்ந்தே யணிநறு பிலிற்ற
லழகிற் குடைந ரழுங்கு நீர்மையின்
மழைமதர் விழியிற் புலம்புமுத் துறைதலை
கடுக்குங் கலவ கவின்மயி லியலா
ரடுக்குஞ் சாயற் குடைந்த மயில்கள்
கானம் புக்கன காண்டகு கிள்ளை
தேனம ரமிழ்த மழலையந் தீஞ்சொற்
குடைந்தே யடைந்த வுயரிய குறிஞ்சி
கடைமணி சேப்பப் படைவிழி மாதர்
460 கொழுநரோ டேடிக் குறித்திடு கிளவியைத்
தழுவுங் குழவியிற் றுங்குறு மஞ்சுக
நகைபட நவிற்ற நாணடை வாராற்
றகைபெற மள்ளர் தழையும் பைங்கூழ்
மகவென வோம்பி மனமகிழ் வாரே
யின்னண பலவளந் துன்னு மருதமு

(நெய்தல் நிலவளம்)

மளப்பருங் கருணைவா யற்புத வியவுளின்
விளற்கரும் பெற்றிமை விண்டென முழங்குந்
திரையெறி கார்கோள் சிறிய சாரலில்
விரைசெய் தாழை நிரையும் பணிச்சை
470 சேற்கண் ணங்கையர் செவ்வாய்த் துகிரின்
வாற்படு மூரல் வண்மணி புரைதலின்
பரத மங்கைமார் பணிமுத் தெள்ளுறுஞ்
சாதமார் நெய்தற் றணிப்பெருந் திணையுஞ்

(தொண்டை நாட்டுச்சிறப்பு)

போற்றப் பெறாஉம் புண்ணியம் படைத்து
மாற்றலி னுலகெலா மமைவரப் படைத்தே
களிமயி லுமையவள் கார்முகில் சிவண
வறமெண் ணன்கை யருமையின் வளர்த்ததூஉம்
துறந்தோ ரெய்துந் துறக்கத் தின்பம்
வருந்தா தடையும் வளவிய பதிகளுள்
480 கருந்தகைப் பொலியுங் கச்சிமா நகரமுந்
தமிழ்க்கு வரம்பாகுந் தனிவேங் கடமும்
குறுவெண் பாட்டாற் குலவு முலகெலா
மறிவினி லளந்த செறிதரு நுண்மதி
தெய்வப் பாவலன் தேர்வள் ளுவதேவன்
செய்தற் றொழிலின் நேர்மை விளக்கி
வதியு நற்புகழும் வையக மோங்கப்
பொதியு ஞான போனக முண்ட
ஞானப் பிள்ளை நங்கை யுயிர்ப்பித்து
இறும்பூது சான்ற செறிதரு பொதும்பர்
வான்றோய் மயிலை வளந்தரு பதியு
490 முண்மைப் பொருளி னுயர்ச்சிகண் டளவில்
வண்மையிற் றருபொருள் வாரி வீசிக்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதரு
சேணுயர் மாணிக்கத் தீங்கனிவாய் மடுத்துச்
சிவமெனப் பொலிந்த சித்தாந்த முணர்த்திய
வவமுறு முயிர்க ளல்லற் படாமே
கட்டுரை கிளந்த பட்டினத் தடிகள்
கட்டிக் கரும்பின் கனிரச மினிக்கு
மட்டிலாச் சீர்த்தியுங் கட்டெழிற் காளை
யாரூர் நம்பி வாரூர் முகிழ்முலை
500 யறிவு நூல்களின் செறிதுறை போன
சங்கிலி யென்னுந் தனிமின் கொடியைப்
பொங்கெழிற் பரவை பூவையோ டிவளையும்
வதுவை யாற்றிய தன்றியு மறையவன்
கதுமென வேளாண் மகளெனப் பார்த்தில
னென்றே யுலகம் நகையெடு வழக்குத்

துன்றிச் செப்பத் துணைமண முடித்த
கற்றைவார் சடையா னேற்றிமா நகரு
மென்சுவைக் கருவென வெடுத்திசை வாய்திகழ்
பண்கனிந் தொழுகும் பழமையழ கெறிக்கு
510 நளவெண் பாவெனு நற்றமிழ்ப் பிண்டம்
வளமுறு தமிழக வானிதி யீட்டிய
கலையி னகன்ற புகழேந்திப் புலவனும்
தொட்டால் மணக்குந் தூத்தமிழ் பாட்டி
லெட்டாப் புகழுறு மெழில்படிக் காசும்
பிறங்கிய **தொண்டை** சிறந்தநன் னாட்டில்
நாலாறு கோட்டத்து மேலாறு வயங்கும்
**புலியூர்க் கோட்டப்** பூம்பதி பலவினுந்
தலையினிற் சூடுந் தனிமணி யென்னக்
கிளர்ந்து விளங்கித் தமிழின்
520 பாவை புரக்கும் **பூவை கிழவோனே.**

—◦◦◦—

### வெண்பா

மெய்யிற் றிருநீறு மென்வாய்ச் சிவமணமுங்
கையிற் பதிநூலுங் காண்மார்பிற்—றுய்யவரன்
கண்மணி யும்பொலியுங் கல்யாண சுந்தரன்றன்
தண்ணளியின் வீறுந் தமிழ்

முத்தமிழி னின்புணர்ந்து மூவாப் புகழ்பெறலா
மத்தன் றிருவருளி னுறலாஞ்—சித்தமல
நீக்கலாஞ் செல்வ நிலைபெறலா மென்னொன்று
மாக்கலா மின்ப வமுது

மும்மைத் தமிழு முழுதுணர்ந்து வாழலா
மிம்மைப் பெறும்பேறு மெய்தலா—மம்மைச்
சிவபோக வாரி திளைக்கலாஞ் சீரி
லவபோகந் தீரலா மாங்கு.

———

## தனியன்

### அறுசீராசிரியம்

எட்டானபேருருவம்வாய்ந்துலகினைப்புரக்குமெம்மான்றன்னை
உட்டானத்தேகாணற்கொருசோபானப்பொருளாயோங்குமெய்ம்
கட்டானபராபரன்ஞானத்தையெமக்களித்துக்காத்தபூவை[மைக்
அட்டாவதானியெனுங்கலியாணசுந்தரனல்லடிகள்போற்றி.

---